# மரியாயியல்

தேவதாய் நம் அன்னை என்று நினைக்கும் போது எவ்வளவு சந்தோஷம். அவர் நம்மை அன்பு செய்கிறார். அவருக்கு நம்முடைய பலவீனங்கள் எல்லாம் நன்கு தெரியும். பின் நாம் எதற்கு பயப்பட வேண்டும்.

அர்ச். குழந்தை தெரசம்மாள்

**முன்னுரை**

மரியாயியல் என்பது சர்வேசுரனுடைய தாயாரான அர்ச். மரியம்மாளை பற்றியப டிப்பினை. இது சுமார் 17– ஆம் நூற்றாண்டு முதல் கிறீஸ்தவ மத படிப்பினைகளுள் ஒன்றாக உள்ளது. இப்படிப்பினையானது தேவமாதாவுக்கும் – கடவுளுக்கும், மற்றும் கடவுளால் படைக்கப்பட்டவை களுக்கும் உள்ள தொடர்பை விளக்குவதாகும்.



## கத்தோலிக்கர்கள் தேவமாதாவைஆராதிக்கிறார்களா?

இல்லை. நாம் ஒருபோதும் தேவமாதாவை ஆராதிப்பது கிடையாது. திருச்சபையிலே மூன்று வகையான ஆராதனைகள் உண்டு. அவற்றை கீழே பார்ப்போம்.

திருச்சபையிலே மூன்று வகையான வழிபாடுகள் (ஆராதனைகள்) உள்ளது. அவை

1. Latria - **முதன்மையான வழிபாடுகள்** (Supreme Worship)
2. Dulia –**சம்மனசுக்களுக்கும் புனிதர்களுக்கும் செய்யப்படுகிற வணக்கம்**
3. Hyperdulia –**தேவதாய்க்குசெய்யப்படுகிறவணக்கம்**

## Latria ‡ முதன்மையானவழிபாடுகள் (Supreme Worship)

திருச்சபையில் செய்யப்படுகிற ஆராதனை மற்றும் வழிபாடுகள் எல்லாம் ஆண்டவர் ஒருவருக்கே. இதனை வேறு எந்த ஒருவருக்கும் செய்ய முடியாது. இது முதன்மையான வழிபாடு எனப்படும்.

## Dulia – சம்மனசுக்களுக்கும் புனிதர்களுக்கும் செய்யப்படுகிறவணக்கம்

நாம் புனிதர்களுக்கும், சம்மனசுக்களுக்கும் செய்கிற மரியாதையும் வணக்கமும் Dulia எனப்படும். அவர்களுடைய புண்ணிய வாழ்வு மற்றும் ஆண்டவரிடத்தில் நமக்காக பரிந்து பேசவல்லவர்களாக இருப்பதாலும் அவர்களுக்கு செய்யும் வணக்கம்.

## Hyperdulia – தேவதாய்க்கு செய்யப்படுகிற வணக்கம்

படைக்கப்பட்ட வஸ்துகளிலே மிகச்சிறந்த படைப்பாக இருக்கிறார்கள் நம் தேவ அன்னை. சேசுகிறிஸ்து நாதருக்கு தாயாக இருக்கிற படியினாலேயும், படைக்கப்பட்டவைகளிலே அதிக வணக்கமும் மரியாதையும் பெற தகுதியுள்ளவர்கள் நம் தேவதாய். இதனை Hyperdulia என அழைக்கப்படுகிறது.

1.சர்வேசுரனால் படைக்கப்பட்டவைகளிலே முழுமையான வரப்பிரசாதத்துடன் படைக்கப்பட்டவர் நம் தேவதாய்.

2. தேவதாய்க்கு மட்டுமே மசர்வேசுரனிடத்தில் உள்ளார்ந் ததொடர்பு இருந்தது. (Only Mary has an intrinsic connection to the hypostatic union)

3. தேவதாய் சர்வேசுரனுடைய சித்தத்திற்கு முழுமையாக அடிபணிந்தார்கள்.

**திருச்சபைவேதசத்தியங்கள்**

1. Mary : Mother of God - மரியாள் – கடவுளின் தாய்.

2. Mary : Perpetual Virgin -மரியாள் – முப்பொழுதும் கன்னிகை

3. Mary : Immaculately Conceived - மரியாள் – அமல உற்பவியாக (ஜென்மபாவமின்றி) உற்பவித்தவர்கள்.

4.Mary:Assumed into Heaven- மரியாள் – பரலோகத்திற்கு ஆரோபணமானது.



## 1. Mary : Mother of God - மரியாள் – கடவுளின் தாய்.

தேவமாதா உண்மையாகவே கடவுளின் தாயாராக இருக்கிறார்கள். இந்த வேத சத்தியமே தேவதாய் அனைத்து சர்வேசுரனிடத்தில் அனைத்து சலுகைகளுக்கும் உரியவராகிறார். கடவுளின் தாயாராக இருப்பதினால் அவருக்கு இயற்கைக்கு அப்பாற்பட்ட (Supernatural Gifts) வரங்களை அவர் கொண்டிருக்கிறார். இதனை பொதுவாக சொல்வதானால் 'அருள் நிறைபெற்றவர்' (Fullness of Grace) எனலாம்.

### நெஸ்டோரியனிஷம் தப்பறை – The Heresy of Nestorianism.

**நெஸ்டோரியனிஷம் தப்பறை** என்பது தேவமாதாவினுடைய கண்ணியத்தையும் குறைவாக மதிப்பிடுவதன் மூலமாக சேசுகிறிஸ்துநாதருடைய தெய்வீக தன்மையை நேரடியாக எதிர்ப்பது. இதில் தேவமாதா கடவுளின் தாய் என்பதை அவர்கள் எதிர்க்கிறார்கள். தேவமாதா கடவுளின் தாயார் கிடையாது, அவர் ஒரு சாதாரண மனிதனுடைய தாயார். அந்த மனிதன் கடவுளுடைய ஒரு தீர்க்கத்தரிசியாக இருக்கிறார். இந்த தப்பறை இன்னொரு தப்பறைக்கு வழி வகுத்தது. அதாவது சேசுநாதரிடத்தில் இரண்டு சுபாவங்கள் தனிதனியே இருக்கின்றன என்ற தப்பறை.

அர்ச். சிரில் அலெக்சான்டிரியா என்பவர் தலைமையில் *431* ம் ஆண்டு ஏபேசு பட்டணத்தில் Third Ecumenical Council தொடங்கியது. இச்சங்கமானது தேவதாய் மெய்யாகவே சர்வேசுரனுடைய தாயார் என்பதை விசுவாச சத்தியமாக அறிவித்தது. இச்சத்தியம் குறித்து அறிவித்தது என்னவென்றால் "வார்த்தையானவரை (சுதனாகிய சர்வேசுரனை) மெய்யான கடவுளாக ஏற்றுக் கொள்ளாதவர்களும், தேவதாய் சர்வேசுரனுடைய தாயார் என்பதையும், அதேபோல் வார்த்தையானவர் மனித உருவம் எடுத்து அவளிடமிருந்து பிறந்தார் என்பதை

விசுவசியாதவர்கள்களையும் திருச்சபைக்கு புறம்பே தள்ளுகிறது. (Ex Communication).[1]"

இதே சத்தியத்தை கிபி. 451–ல் நடைபெற்ற Cholcedon சங்கமும், கி.பி 553–ல் நடைபெற்ற Constantinople சங்கமும் பிரகடணப் படுத்தின.

சர்வேசுரன் மனிதனாக பிறந்த ஒவ்வொருவருக்கும் இரண்டு நிலைகளை கொடுத்துள்ளார்.

1. ஆன்மா
2. சீரம்

ஒருமனிதன் உயிர்வாழ்வதற்கு இவை இரண்டுமே அவசியம்.
ஆன்மாவை நாம் நேரடியாக கடவுளிடமிருந்தே பெற்றுக் கொள்கிறோம்.
சீரத்தை நமக்கு கடவுள் நம் பெற்றோர் மூலமாகதருகிறார்.

அதேபோல் சேசுநாதரிடத்திலும் இரண்டு சுபாவங்கள் இருக்கிறது.

1. தேவசுபாவம்
2. மனிதசுபாவம்

தேவதாய் நம் பெற்றோரைப் போல் சேசுநாதருக்கு மனித சுபாவத்தை கொடுத்தார்கள். தேவசுபாவம் அவருக்கு ஆதிமுதலே இருக்கிறது.

தேவகுமாரனாகிய சேசுநாதரிடத்தில் தேவசுபாவமும் மனிதசுபாவமும் ஒன்றாய் இருக்கிறதினாலே அவரை அற்புதமாக கர்பந்தரித்து பெற்ற கன்னி மரியம்மாள் மெய்யாகவே சர்வேசுரனுடைய தாயார் என்பது திண்ணம். ஆகவே கன்னிமரியாயை மெய்யாகவே தமத்திருத்துவத்தின் இரண்டாம் ஆளாகிய சேசுநாதரை பெற்ற தாயார் என்று விசுவாச சத்தியமாக விசுவசிக்கிறோம்.[2]

---

[1] Mariology – A dogmatic Treatise on the BVM, Mother of God, pg. 5

[2] Sancta Maria, July – August 2014.



**வேதாகமசான்றுகள்**

தேவமதா சர்வேசுரனுடைய தாயார் என்பதற்கு வேதாகமத்தில் பல சான்றுகள் உள்ளன. அவற்றுள் சில இங்கே தரப்பட்டுள்ளது.

மத்தேயு சுவிசேஷத்தில் சேசுநாதருடைய வம்ச வரிசை முடியும் போது“…யாக்கோபு மரியாயின் மணவாளியான சூசையைப் பெற்றார். **இவளிடமாக கிறிஸ்தெனப்படுகிற சேசுநாதர் பிறந்தார்.**” (மத். *1. 1–17*)

“பின்பு வீட்டில் பிரவேசித்து பாலனை அவர் தாயாரான மரியம்மாளோடு கண்டு, சாஷ்டாங்கமாக விழுந்து அவரை ஆராதித்தார்கள்”. (மத். *2. 11*)

“இவருடைய தாயார் மரியம்மாளல்லவோ?” (மத். *13. 55*)

“ஆண்டவருடைய தூதன் சூசையப்பருக்கு நித்திரையில் தோன்றி: நீர் எழுந்திருந்து, குழந்தையையும் அதன் தாயாரையும் அழைத்துக் கொண்டு எஜீப்து தேசத்திற்கு ஓடிபோய் நான் உனக்கு சொல்லுந்தனையும் அங்கேயிரும்” (மத். *2. 13*)

அர்ச் லூக்காஸ் சுவிசேஷத்தில் எலிசெபத்தம்மாள் மாதாவை இவ்வாறு வாழ்த்துகிறாள் "என் ஆண்டவருடைய தாயார் என்னிடத்தில் எழுந்தருளிவர எனக்கு கிடைத்ததெப்படி?" (லூக். 1. 43).

"இதோ உமது உதரத்தில் கெற்பந்தரித்து ஓர் குமாரனைப் பெறுவீர். அவருக்கு சேசு என்னும் நாமஞ் சூட்டுவீர்" (லூக். 1. 31)

"இஸ்பிரித்துசாந்து உமதுமேல் எழுந்தருளி வருவார். உன்னதருடைய வல்லபமானது உமக்கு நிழலிடும். ஆகையால் உம்மிடத்தில் பிறக்கும் பரிசுத்தர் தேவசுதன் எனப்படுவார்"(லூக். 1. 36)

"பின்பு பிள்ளைக்கு விருத்தசேதனஞ் செய்வதற்கு எட்டுநாளானபோது, அவர்தாயின் உதரத்தில் உற்பவிக்கு முன்னே தேவதூதனால் சொல்லப்பட்டபடியே சேசு என்ற நாமதேயம் அவருக்கு சூட்டப்பட்டது." (லூக். 2. 21)

"சேசுநாதருடைய பிதாவும் மாதாவும் வருஷந்தோறும் பாஸ்கா என்னும் மகாபண்டிகை நாளிலே ஜெருசலேம் நகருக்குபோவார்கள்" (லூக். 2. 41)

"அத்தருணத்திலே அவருடைய (சேசுநாதருடைய) தாயும் சகோதரரும் (வெளியே நின்று அவரை அழைக்கும்படி அவரிடத்தில் ஆளனுப்பினார்கள" (மார்க். 3. 31)

"மூன்றாம் நாளிலே கலிலேயாநாட்டிலுள்ள கானாவூரிலே ஓர் கலியாணம் நடந்தது. சேசுநாதருடைய தாயாரும் அங்கேயிருந்தாள்.

அப்பொழுது திராட்சைரசம் அவர்களுக்கு குறைவாய் போனதினாலே சேசுநாதருடைய தாயார் அவரை நோக்கி அவர்களுக்கு இரசமில்லை என்றார்.

ஆயினும் அவருடைய (சேசுநாதருடைய) தாயார் பணிவிடைக்காரரை நோக்கி அவர் உங்களுக்கு என்ன சொல்லுகிறாரோ அதன்படி செய்யுங்கள் என்றாள்"(அரு. 2. 1,3,5).

“சேசுநாதருடைய சிலுவையின் அருகே அவருடைய தாயாரும், அவர்தாயாரின் சகோதரியாகிய கிளேயோப்பா மரியம்மாளும், மரிய மக்தலேனம்மாளும் நின்று கொண்டிருந்தார்கள்” (அரு. *19. 25*)

“இவர்கள் எல்லோரும் ஸ்திரீகளோடும், சேசுநாதருடைய தாயாராகிய மரியம்மாளோடும் அவருடைய சகோதரரோடும் ஒரு மனமாய் ஜெபத்தில் நிலைத்திருந்தார்கள்.” (அப். நடபடி *1. 14*)



## 2. மரியாள் : முப்பொழுதும் கன்னிகை

தேவதாய் முப்பொழுதும் கன்னிகை என்று பிரகடணப்படுத்தப்பட்ட வருடம் 553ம் ஆண்டு. 5–ஆம் எக்குமேனிக்கல் சங்கத்தில் இந்தசத்தியம் பிரகடணப்படுத்தப்பட்டது. தேவதாய் முப்பொழுதும் கன்னிகை என்பது தேவதாய் குறித்த நான்கு சத்தியங்களுள் ஒன்று. அதாவது தேவதாய் சேசுநாதரை கருவில் சுமக்கும் முன்பும், அவரை கருவில் சுமக்கும் போதும் அவரை பெற்ற பிறகும் கன்னிகையாகவே இருந்தார். *649* ஆம் ஆண்டு கூடிய லாத்தாரன் சங்கத்தில் பரிசுத்த பாப்பரசர் மார்டின் *1* கூறியது:

“**ஆசீர்வதிக்கப்பட்ட எப்போதும் கன்னிகை மற்றும் மாசற்ற மரியாள் இஸ்பிரித்துசாந்துவினால் கருத்தரித்தாள். தன்னுடைய பரிசுத்த கற்பு கழையாமல் சேசுநாதரைப் பெற்றெடுத்தார். சேசுநாதரை பெற்ற பிறகும் அவர் கன்னித் தன்மையை இழக்கவில்லை**”[3]

தேவதாய் பிறந்தபோதும், சேசுநாதரை பெற்றபோதும், சேசுநாதரை பெற்ற பிறகும் மெய்யாகவே பரிசுத்த கன்னிகையாகவே இருந்தார்கள். இது சர்வேசுரனுடைய சித்தம்” (அர்ச். சிங்கராயர்)[4]

சேசுகிறீஸ்துநாதர் தேவதாய் மூலமாக பிறந்து இருந்தாலும், அவருடைய பிறப்பிற்கு பிறகும் தேவதாய் மெய்யாகவே பரிசுத்த கன்னிகையாகவே இருந்தார்கள். ஏனென்றால் தீர்க்கதரிசிகள் இவ்வாறு கூறுகிறார்கள். “ஒரு கன்னி கருதாங்கி ஒரு மகனை பெற்று எடுப்பார்”. அர்ச். தாமஸ் அக்குவினாஸ்[5]

---

[3]https://en.wikipedia.org/wiki/Perpetual_virginity_of_Mary

[4] St. Leo, Sermon 22

[5] Summa Theol. 28. 2

தேவதாய் சேசுநாதரை கருவாக தன் உதரத்தில் சுமக்கும் முன்னமே ஒரு கன்னியாக இருந்தார்கள் என்பதற்கு சுவிசேஷத்தில் சான்றுகள் உள்ளன. அர்ச். மத்தேயு மற்றும் லூக்காஸ் இருவருமே தேவதாயை ஒரு கன்னி என்று சொல்லியிருக்கிறார்கள். (மத். 1: 18) (லூக். 1: 26–27) கபிரியேல் சம்மனசானவர் மரியாயிடம் நீர் மெசியாவிற்கு தாயாராக இருப்பீர் என்று சொன்னபோது, மரியாள் தூதனிடம் "இது எப்படியாகும், நான் புருஷனை அறியேனே?"என்று சொன்னதன் மூலம் அவர் கன்னிமையை அறியலாம்.

சேசுநாதருடைய பிறப்புக்குப் பின் தேவதாய் கன்னிசுத்தம் கெடாதவர்களாகவே இருந்திருக்கிறார்கள். நம் அன்னைமரியாள் கிறீஸ்துநாதரை பெற்றபின் வேறு பிள்ளைகளை பெற்றார் என்று சுவிஷேசத்தில் எந்த இடத்திலும் சொல்லப்படவில்லை. ஆனால் சில இடங்களில் சேசுநாதருடையசகோதரர்கள் என சொல்லப்பட்டிருக்கிறது. குறிப்பாக மத். 13: 56, அரு. 6: 42, மார்க். 6: 3. சேசுநாதருடைய சகோதரர்கள் சகோதரிகள் என குறிப்பிடப்படுபவர்கள் அவருடைய நெருங்கின உறவினர்கள் என்றுஅர்த்தம். இவ்வாக்கியங்களில் சொல்லப்பட்ட யாக்கோபும் யேசேப்பும் கிளேயோப்பாவின் மனைவியாகிய மரியம்மாளுடைய பிள்ளைகள். இதை நாம் மத். 27: 56 – ஆம் வசனத்தில் காண்கிறோம்.

**"இயாகப்பருக்கும் யேசேப்புக்கும் தாயான மரியம்மாளும், செபதேயுவின் குமாரர்களுடைய தாயும் இருந்தார்கள்"**.

தேவதாய்க்கு வேறுபிள்ளைகள் இருந்திருந்தால் ஏன் சேசுநாதர்தான் சிலுவையில் மரிப்பதற்குமுன்பு தேவதாயை தான் நேசித்த அர்ச். அருளப்பரிடம் ஒப்படைக்க வேண்டும். சேசுநாதர் இறப்புக்குப் பின் அவருக்கு பிள்ளைகள் இருந்திருந்தால், அவர்கள் தான் மரியம்மாளை கவனித்துக் கொள்ள கடமைபட்டவர்கள். ஆனால் தேவதாய்க்கு வேறுபிள்ளைகள் இல்லாத காரணத்தால், சேசுநாதர் தன் மரணத்திற்கு பிறகு மரியாயை தனியே விட்டு விட

விரும்பவில்லை. அதனால் தான் அவரை அர்ச். அருளப்பரிடம் ஒப்படைக்கிறார். இதை நாம் அருளப்பர் சுவிசேஷத்தில் காணலாம். (அருளப்பர் 19: 26–27)

அதனால் தேவதாய் சேசுநாதருடைய பிறப்புக்கு முன்பும், அவருடைய பிறப்பின் போதும், அவர் பிறந்த பிறகும் கன்னிகையாகவே இருந்தார் என்பதில் எந்த ஒரு சந்தேகமில்லை.

"இந்த உலகில் வாழும் அனைத்து குருக்களும், துறவிகளும் மற்றும் கன்னியர்களும் தங்களை கன்னியர்களுக்கு எல்லாம் கன்னிகையான பரிசுத்த தேவ அன்னையிடம் ஒப்படைக்குமாறு தங்களை அறிவுறுத்துகிறேன்." அர்ச். அம்புரோஸ்.[6]

## 3. தேவதாய் – அமலஉற்பவி (Mary – Immaculately Conceived)

"தேவதாயின் அமல உற்பவி என்னும் சத்தியம் கடவுளால் வெளிப்படுத்தப்பட்ட விசுவாச உறுதிபாடு. விசுவாசிகள் எல்லோராலும் ஐயம் ஏதுமின்றி முழுமனதோடு ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய ஏற்றம் தரும் உறுதிபாடு"

பாப்பரசர் 9–ம் பத்திநாதர்.

1854–ம் ஆண்டு டிசம்பர் மாதம் திங்கள் கிழமை 8ம் தேதி திருச்சபையின் தலைநகரமாகிய உரோமை மாநகரில் அர்ச். இராயப்பர் தேவாலயத்தில் இந்த சத்தியத்தை பிரகடணப்படுத்தினார்.

[6] https://www.papalencyclicals.net/pius12/p12sacra.htm

1849–ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 2–ம் நாள் பாப்பரசர் 9–ம் பத்திநாதர் அகில உலகிலுமுள்ள மேற்றிராணிமார்களுக்கு ஒரு சுற்றறிக்கைவிடுத்தார். அதாவது ஒவ்வொரு மேற்றிராசனத்திலும், கத்தோலிக்க விசுவாசிகள் மத்தியிலும் அமலோற்பவ அன்னை பற்றி எத்தகைய விசுவாசம் வேரூன்றி இருக்கிறது. எந்த முறையில் அமலோற்பவ அன்னையின் திருநாட்கள் கொண்டாடப் படுகின்றன. மேற்றிராணிமார்கள் இது விஷயமாக கொண்டுள்ள கருத்து என்ன? அமல உற்பவி என்ற உண்மையை சத்திய பிரகடனமாக உலகிற்கு உரைப்பது சரி தானா? என வினவி திட்ட வட்டமான பதில்களை கோரினார் பாப்பரசர்.

அக்காலத்தில் அகில உலகிலும் 800 மேற்றிராணிசனங்கள் இருந்தன. அவற்றுள் சில மிகபிற்படுத்தப்பட்ட நாடுகளில் இருந்தன. பாப்பரசரின் கேள்விகளுக்கு பதில் அனுப்பிய மேற்றிராணிமார்களின் எண்ணிக்கை 665.

இவர்களுள் பெரும்பான்மையானோர் அமல உற்பவ சத்தியத்தை தவறாவரத்தோடு அறிவிக்கவேண்டுமென்று வேண்டியிருந்தார்கள்.

அமல உற்பவி என்னும் சத்தியத்தில் ‘‘நம்பிக்கை இல்லை’’எனஒருவர் கூட சொல்லவில்லை. பாப்பரசரின் தவறாவரத்தோடு வெளியிடுவது அவசியமா இல்லையா என்பதை பற்றியே அபிப்பிராயங்கள் ஓரளவு மாறுபட்டன.

அமல உற்பவத்தின் தத்துவத்தை திருச்சபை பாரம்பரிய வேத சாஸ்திர நூல்களிலிருந்தும், கத்தோலிக்க வழிபாட்டு முறைகளிலிருந்தும் தெரிவிக்கும் படியாக இரண்டு குழுக்களை நியமித்தார்.

முதல் குழு 19 கர்தினால்களை கொண்டது.

இரண்டாவது குழு 20 வேத சாஸ்திர நிபுணர்களை கொண்டது.

நீண்டஆராய்ச்சிசெய்த பின், 1854–ம் ஆண்டுஆகஸ்ட் 2–ம் நாள் இரண்டு குழுக்களும் தமது முடிவை தெரிவித்தனர். அதில் 2 பேர் தவிர மற்ற அனைவரும் சாதகமான பதில்களை தந்தனர். எனவே பாப்பரசர் தமது தவறாவரத்தோடு திருச்சபையின் விசுவாச சத்தியமாக வெளிபடுத்த திர்மானித்தார்.

*1854–ம் ஆண்டு டிசம்பர் 8–ம் தேதி பாப்பரசர் 9–ம் பத்திநாதர் இச்சத்தியத்தை பிரகடனப்படுத்தினார்.*

**"தேவதாயின் அதிமிக தோத்திரத்திற்காக, அப்போஸ்தலர்கள் இராயப்பர் சின்னப்பர் இவர்களுடைய அதிகாரத்தைக் கொண்டும் தமதுஅதிகாரத்தைக் கொண்டும் "பாக்கியவதியாகிய கன்னிமாமரியின் அத்துமம் படைக்கப்பட்டு, அவர்களுடைய சரீரத்தோடு இணைக்கப்பட்ட பொழுதே, சர்வவல்லபரான கடவுளின் தனிபெரும் வரப்பிரசாதத்தாலும் உலக இரட்சகர் சேசுகிறிஸ்துநாதரின் பேறுபலன்களைக் கொண்டும், தனியொரு விதிவிலக்கால், ஜென்ம பாவமாசில்லிருந்து பாதுகாக்கப்பட்டது என்னும் பக்திக்குரிய கொள்கை, கடவுளால் வெளிப்படுத்தப்பட்ட, கத்தோலிக்க தொடர்பான விசுவாச சத்தியம் என்பதையும், எனவே இது எல்லா விசுவாசிகளாலும், பாவமன்னிப்படைய வேண்டுமானால், இருதயத்தில் உறுதியாகவும் இடைவிடாமலும் விசுவசிக்க வேண்டியது. மோட்சம் அடைய வேண்டுமானால் வாயாலும் வாழ்த்த வேண்டியது என்பதையும் நாம் அறிவிக்கிறோம், எடுத்துரைக்கிறோம், பிரகடனம் செய்கிறோம்!"**

## The Definition

Wherefore, in humility and fasting, we unceasingly offered our private prayers as well as the public prayers of the Church to God the Father through his Son, that he would deign to direct and strengthen our mind by the power of the Holy Spirit. In like manner did we implore the help of the entire heavenly host as we ardently invoked the Paraclete. Accordingly, by the inspiration of the Holy Spirit, for the honor of the Holy and undivided Trinity, for the glory and adornment of the Virgin Mother of God, for the exaltation of the Catholic Faith, and for the furtherance of the Catholic religion, by the authority of Jesus Christ our Lord, of the Blessed Apostles Peter and Paul, and by our own: "We declare, pronounce, and define that the doctrine which holds that the most Blessed Virgin Mary, in the first instance of her conception, by a singular grace and privilege granted by Almighty God, in view of the merits of Jesus Christ, the Savior of the human race, was preserved free from all stain of original sin,

is a doctrine revealed by God and therefore to be believed firmly and constantly by all the faithful."[29]

Hence, if anyone shall dare — which God forbid! — to think otherwise than as has been defined by us, let him know and understand that he is condemned by his own judgment; that he has suffered shipwreck in the faith; that he has separated from the unity of the Church; and that, furthermore, by his own action he incurs the penalties established by law if he should are to express in words or writing or by any other outward means the errors he think in his heart.[7]

Pope Pius IX

## 4. Mary Assumed Into Heaven – மரியா–பரலோகத்திற்குஆரோபணமானது

1946–ஆம் ஆண்டு மே மாதம் 1ம் தேதி பாப்பரசர் 12–ஆம் பத்திநாதர் 'Deiparae Virginis Mariae'[8] 'மரியாள் கடவுளின் தாய்' என்ற மடலை வெளியிட்டார். அதில் தேவமாதா ஆத்தும சீரத்தோடு பரலோகத்திற்கு ஆரோபமணமானது கத்தோலிக்க விசுவாச சத்தியமாக அறிவிக்க வேண்டும் என்று ஆயிரக்கணக்கான கடிதங்கள் வந்துள்ளன. இந்த கடிதங்கள் எல்லம் கர்தினால்மார்கள், மேற்றிராணிமார்கள், ஆயர்கள், குருக்கள் மற்றும் கத்தோலிக்க விசுவாசிகளிடம் இருந்து பெறப்பட்டவை.

இதை விசுவாச சத்தியமாக அறிவிப்பதற்கு 12–ஆம் பத்திநாதர் தனக்குமுன் இருந்த 9–ஆம் பத்திநாதர் அடிச்சுவற்றை பின்பற்றினார். அதாவது எப்படி 1854–ல் தேவமாதா அமல உற்பவி என அறிவிப்பதற்கு முன் மேற்கொண்ட பணிகளை இவரும் பின் தொடர்ந்தார்.

பாப்பரசர் இரண்டு கேள்விகளை அகில உலகிலுமுள்ள ஆயர்மார்களிடம் கேட்டார்.

---

[7] https://www.papalencyclicals.net/pius09/p9ineff.htm

[8] https://www.papalencyclicals.net/pius12/p12deipa.htm

1. தேவதாய் பரலோகத்திற்கு ஆரோகணமானதை தங்களுடைய விசுவாசிகள் எவ்வாறு கொண்டாடுகிறார்கள்?

2. முக்கியமாக ஆயர்கள் தங்கள் ஞானம், புத்தியினால் தேவமாதா பரலோகத்திற்கு ஆரோபமணமானதை எவ்வாறு காண்கிறார்கள்? இதே கருத்தை தங்கள் குருக்களும், விசுவாசிகளும் கொண்டுள்ளார்களா?



தேவமாதா பரலோகத்திற்கு ஆரோபணமானது குறித்து அனைவருமே ஒருமித்த கருத்தாக விசுவாச சத்தியமாக அறிவிக்கலாம் என்று பதிலளித்தார்கள். ஆகவே பாப்பரசர் தேவமாதா பரலோகத்திற்கு ஆரோபணமானது கடவுளால் வெளிப்படுத்தப் பட்டது என தனது தவறாவரத்தால் அறிவிக்க சித்தமானார்.

நவம்பர் மாதம் 1–ஆம் தேதி 1950–ஆம் வருடம், ஆயிரக்கணக்கான மக்கள் படைசூழ 12–ஆம் பத்திநாதர், ரோமிலுள்ள அர்ச். இராயப்பர் சதுக்கத்திலே பேசினார்.

"சேசுநாதருடைய அதிகாரத்தினுடையவும், அப்போஸ்தலர்களானஅர்ச். இராயப்பர் சின்னப்பர் இவர்களுடைய அதிகாரத்தையும் கொண்டு, தமது அதிகாரத்தைக் கொண்டும் நான் பிரகணப்படுத்துவது என்னவென்றால், அமல உற்பவியான சேசுநாதருடைய தாய், இந்த உலகத்திலே தன்னுடைய அலுவல்களை முடித்துக் கொண்டு ஆத்தும சரீரத்தோடு மோட்சத்திற்கு எழுந்ததருளி சென்றார்கள். தமது பிரகடணத்தை, வரையறை மாற்றுவது எல்லாருக்கும் தடை செய்யப்பட்டுள்ளது. இதை மாற்ற முயற்சி செய்கிறவர்களை சர்வ வல்லமையுள்ள சர்வேசுரனுடைய கோபத்திற்கும், அப்போஸ்தலர்களான

இராயப்பர் மற்றும் சின்னப்பர் கோபத்திற்கும் உள்ளாவார்கள்'' என்றார் பாப்பரசர் 12–ஆம் பத்திநாதர்.

Hence if anyone, which God forbid, should dare willfully to deny or to call into doubt that which we have defined, let him know that he has fallen away completely from the divine and Catholic Faith.

In order that this, our definition of the bodily Assumption of the Virgin Mary into heaven may be brought to the attention of the universal Church, we desire that this, our Apostolic Letter, should stand for perpetual remembrance, commanding that written copies of it, or even printed copies, signed by the hand of any public notary and bearing the seal of a person constituted in ecclesiastical dignity, should be accorded by all men the same reception they would give to this present letter, were it tendered or shown.

It is forbidden to any man to change this, our declaration, pronouncement, and definition or, by rash attempt, to oppose and counter it. If any man should presume to make such an attempt, let him know that he will incur the wrath of Almighty God and of the Blessed Apostles Peter and Paul.

Given at Rome, at St. Peter's, in the year of the great Jubilee, 1950, on the first day of the month of November, on the Feast of All Saints, in the twelfth year of our pontificate.

I, PIUS, Bishop of the Catholic Church, have signed, so defining.

**தேவதாயின் முக்கியதிருநாட்கள்**

நமது தாயாகிய திருச்சபை தேவதாயின் வாழ்வில் நடந்த பல நிகழ்வுகளை சிறப்பிப்பதற்காகவும், அவருக்கு வணக்கம் செலுத்துவதற்காகவும் பல திருநாட்களை கொண்டாடுகிறது.

பிப். 2 —தேவதாயின் சுத்திகரத் திருநாள்

பிப். 11 – லூர்து மாதா திருநாள்

மார். 25 – மங்கள வார்த்தை திருநாள்

மே. 13 – பாத்திமா மாதா திருநாள்

மே. 31 – தேவமாதா இராக்கிணியாக (அரசியாக) முடிசுட்டப்பட்ட திருநாள்.

ஜுன் 26 – சகாய மாதா திருநாள்

ஜுலை 2 –தேவமாதா எலிசெபத்தம்மாளை சந்தித்த திருநாள்

ஜீலை 16 –கார்மெல் மாதா திருநாள்

ஆக. 5 – பனிமய மாதா திருநாள்

ஆக. 15 – தேவமாதா பரலோகத்திற்கு ஆரோபணமான திருநாள்

ஆக. 22 – மரியாளின் மாசற்ற இருதய திருநாள்

செப். 8 – தேவமாதா பிறந்த திருநாள்

செப். 12 – தேவதாயின் திருநாமத்தின் திருநாள்

செப். 15 – தேவதாயின் 7 வியாகுலத் திருநாள்

அக். 7 – ஜெபமாலை மாதா திருநாள்

அக். 11 – தேவதாயின் தாய்மையின் திருநாள்

நவ. 21 – தேவமாதா கோவிலில் காணிக்கையாக ஒப்புக்கொடுக்கப்பட்ட திருநாள்

நவ. 27 – Our Lady of Miraculous Medal

டிச. 8 – அமலோற்பவ மாதா திருநாள்

டிச. 12 – குவடலுப்பே மாதா திருநாள்

## சர்வேசுரனைப் பற்றிய அறிவை மனுக்குலம் பெற மாமரி வழியாயிருந்தார்கள்!

ஆதாமின் பாவத்திற்குப் பிறகு, மனிதர்கள் மென்மேலும் பாவத்தின் பாதாளத்தில் விழுந்து மூழ்கிப் போனார்கள். மனிதனுடைய இழிந்த நிலை, இனி மீட்டெடுக்கவே முடியாது என்று தோன்றும் அளவுக்கு அதிகரித்தது.

பெருவெள்ளத்தின் அழிவுக்குப் பின்னரும், நீதிமானாகிய நோவேயின் சந்ததியாரும் கூட தங்கள் முந்தைய பாவச் சந்ததிகளையே கண்டு பாவிக்கத் தொடங்கினார்கள். கடவுளைப் பற்றிய மெய்யான அறிவும், சிந்தனையும் காணாமல் போயின. மனிதரின் மிகக் கீழான, மிக அருவருக்கத் தக்க உள்ளுணர்வுகளே ஒழுக்க விதிகளாக ஆக்கப்பட்டன.



மனிதர்கள் இவற்றிற்கு உருவங்கள் தந்து அவற்றைத் தங்கள் தெய்வங்களாக ஆக்கிக்கொண்டார்கள். இவ்வாறு ஏராளமான பொய்த் தெய்வங்கள் தோன்றின.

உணரக் கூடியதையும், சரீரம் சார்ந்ததையும், புலன்கள் சார்ந்ததையும் மட்டுமே நேசிப்பது மனித சுபாவத்தைத் தரந்தாழ்த்துகிறது, அதை இழிவானதாக ஆக்குகிறது. ஆனால் மனுக்குலத்திடம் கொஞ்ச நஞ்சம் ஒட்டிக்கொண்டிருந்த கடவுளைப் பற்றிய மிக அற்பமான அறிவை, மனிதன் தன் புலன் சார்ந்த அறிவோடு ஒன்றாக்கி, இவ்வாறு புலனின்பத்தைக் கடவுளாக்கி, இத்தகைய ஒரு

தெய்வத்தைத் தன் வாழ்வின் வழிகாட்டியாகவும். தன் சொந்தமாகவும் கொண்டிருப்பதே தன் வாழ்வின் நோக்கமாகக் கருதினான்.

இது மெய்யங்கடவுளிடமிருந்து மனிதனை முழுமையாகப் பிரித்தது. அது மனிதனின் முழுமையான மனச் சிதறலாகவும் இருந்தது. இதன் முடிவு அறிவின் மரணமும், நல்லொழுக்கத்தின் மரணமும், அதன் விளைவான நித்திய மரணமுமேயன்றி வேறு எதுவாகவும் இருக்க முடியாது.

இவ்வாறு மனிதன் ஜுப்பிட்டர், ஜுனோ என்னும் தெய்வங்களில் சரீர இன்பத்தைத் தெய்வமாக்கினான். சுபாவத்திற்கு எதிரான அருவருக்கத் தக்க காரியங்களை ஆதோனிஸில் தெய்வமாக்கினான். கட்டுப்படுத்தப்படாத மிகப் பெரும் காம இச்சையை வீனஸிலும், அதீதமான புலன் இன்பத்தை பாக்கஸிலும், மிருக சக்தியைச் செவ்வாயிலும் தெய்வங்களாக்கினான்.

இன்னும் ஓராயிரம் மிகக் கீழ்த்தரமான காரியங்களும் இவ்வாறு அவனால் தெய்வங்கள் ஆக்கப்பட்டன. நம் நாட்டில் மனித மனதின் அசுத்தங்கள் மட்டுமின்றி, மனிதன் எதற்கெல்லாம் பயந்தானோ அவையும் தெய்வங்களாக்கப்பட்டன. இவ்வாறு, இந்தப் பாவங்களைச் செய்வதன் மூலம் இந்தப் பொய்த் தெய்வங்களுக்கு வணக்கம் செலுத்தத் தன்னால் முடியும் என்று நம்ப அவன் முற்பட்டான்.

அதனால் தப்பறை மற்றும் அசுத்தமான கீழாங்கிஷ நிலையின் அடிவாரத்தில் அவன் மூழ்கிக் கிடந்தான். அவனுடைய ஆத்துமம் அவனுடைய இச்சைகளின் கீழ் செத்துக் கிடந்தது.

கடவுளே நேரடியாகத் தேர்ந்து கொண்ட ஆபிரகாமின் சந்ததியாகிய இஸ்ராயேல் மக்களினமும் கூட பல முறை இந்த விக்கிரகங்களின் வழிபாட்டுக்குத் தன்னை ஒப்புக்கொடுத்து, அதனால் கடவுளின் கடுங்கோபத்திற்கு ஆளானதை நாம் பழைய ஏற்பாட்டில் பல முறை வாசிக்கிறோம்.

மெய்யங்கடவுளை அறிந்து, அந்த அறிவின் பலனாக அவரை நேசித்து, அந்த நேசத்தின் தூண்டுதலால் அவருக்கு ஊழியம் செய்து, அதனால் இரட்சணியம் அடைய வேண்டியவனாக மனிதன் இருக்கிறான்.

ஆனால், மேற்கூறிய நிலையில், உண்மையான தேவ அறிவுக்கு மனுக்குலம் திரும்பக் கொண்டு வரப்படுவது கிட்டத்தட்ட சாத்தியமே இல்லை என்று தோன்றியது.



ஏனெனில் மனிதன் சுபாவப் படி சடப்பொருளான சரீரத்தோடும், அரூபப் பொருளான ஆத்துமத்தோடும் படைக்கப் பட்டிருந்ததால், சுத்த அரூபியாக மட்டுமே இருக்கிற கடவுளை விசுவசிப்பதும், அவரை நேசிப்பதும் அவனுக்கு மிகக் கடினமான செயலாக இருந்தது.

சில திருச்சபைத் தந்தையர் கூறுகிறபடி, விக்கிரக வழிபாடு முற்றிலுமாக ஒரு வழிதவறுதலாக இருந்தது மட்டுமின்றி, அது ஓர் அந்தரங்க உணர்வாகவும் இருந்தது. கண்ணுக்குத் தெரியாத கடவுளை அறிந்து நேசித்து சேவிக்க மனிதனால் இயலவில்லை. தனது உணர்வுகளுக்குள் நுழைய வல்லவரும், தன்னைக் கண்டு பரிதாபப்படக் கூடியவருமான ஒரு கடவுளை அவன் தேடினான். தான் தொட்டு உணரக்கூடிய ஒரு கடவுளுக்காக அவன் ஏங்கினான். அவர் பேசுவதைக் கேட்க விரும்பினான். இப்போது, மனிதாவதாரத்தின் மூன்றாவதான ஒரு நோக்கம் படிப்படியாக நம் கண்முன் விரிவதைக் காணுங்கள்!

இந்நிலையில், மனுக்குல இரட்சணியத்திற்கு ஒரே ஒரு சாத்தியமான வழிதான் இருந்தது. அது: ஒரு காணக்கூடிய கடவுள், ஒரு தேவ–மனிதன், ஓர் எம்மானுவேல் ஆவார்.

இவ்வாறு, மனிதனின் சுபாவமான அக உணர்வுகள் மற்றும் அவனுடைய பலவீனத்தின் வழியாகவே, தம்மைப் பற்றிய அறிவுக்கும், தம் மீதான நேசத்திற்கும் அவனைத் திருப்பிக்கொண்டு வர கடவுள் சித்தங்கொண்டார்.

ஆகவே, தம்முடைய ஏக பேறானவரும், தமது அளவற்ற இலட்சணங்களின் அதே பொருண்மையுள்ள சாயலும், தாம் அனைத்தையும் யார் வழியாகப் படைத்தாரோ, அந்த வார்த்தையானவருமாகிய தம் திருச்சுதன் மாம்சத்தைத் தம்மோடு இணைத்துக்கொண்டு, காணக்கூடிய கடவுளாக, தேவமனிதனாக ஆக வேண்டும் என்றும், மெய்யானதும், சந்தேகத்திற்கு இடம் தராததும், தொட்டுணரக்கூடியதும், தயாள இரக்கமுள்ளதும், மனிதனுடைய பாவமில்லாத உணர்வுகளைத் தானும் உணரக் கூடியதும், துன்புறக் கூடியதுமான அந்த மனுஷீகத்தைக் கொண்டு தம்முடைய தெய்வீக அறிவிற்கும், நேசத்திற்கும் மனிதனைக் கவர்ந்திழுக்க வேண்டுமென்றும் கடவுள் தீர்மானித்தார்.

நம் ஆண்டவர் வந்தார்! மனிதன் இது வரை அருவருத்து வந்த சரீர பரிசுத்ததனத்தையும், கன்னிமையின் மகத்துவத்தையும், மனிதத்தன்மையையும், பிறர் சிநேகத்தையும் போதித்தார். அவருடைய சீடர்கள் அன்றைய மனிதனின் சிந்தனைக்கு எதிரானவற்றை போதித்து, அவர்கள் மீது வெற்றி கொண்டார்கள்.

கிறீஸ்தவ வேதம் காட்டுத் தீ போலப் பரவியது. விக்கிரங்கள் தகர்ந்து விழுந்தன, அசுத்தங்களில் விழுந்து கிடந்தவர்கள், இன்று சுரங்கக் கல்லறைகளில் சிலுவையில் அறையுண்டு பரிதாபமாக மரித்த ஒரு யூதரில் தங்கள் உண்மையான சர்வேசுரனைக் கண்டுகொண்டார்கள். அவருக்காக சிலுவையில் அறையப்படவும், சகல கொடூர கலாபனைகளுக்கும் உட்படவும் மகிழ்ச்சியோடு முன்வந்தார்கள்.



இந்த தேவ அறிவை மனிதன் பெற்றுக்கொண்டது எவ்வாறு நிகழ்ந்தது? பழைய ஏற்பாட்டுக் காலத்தில் ஒளிரும் மேகம், செங்கடல், மனிதனின் கண்களுக்கு முன்பாகப் பிரிந்தது, மேகத் தூண், நெருப்புத் தூண், பற்றியெரிந்ததாகத் தோன்றிய சீனாய் மலை, மன்னா, பாறையிலிருந்து குடிநீர், சுடர் விட்டெரிந்த மோயீசனின் முகம் என்று, மெய்யான சர்வேசுரன் ஒருவர் இருப்பது பற்றிய பல அடையாளங்கள் மனிதனுக்குக் கொடுக்கப்பட்டதும் கூட அவனுக்குப் போதவில்லை. இரத்தமும், சதையுமாக, 'நம்முடனே கூட வாசமாயிருக்கக்கூடிய' ஒரு கடவுளைக் காண அவன் ஏங்கிக் கொண்டிருந்தான். மனுவுருவான வார்த்தையானவரில் மனிதனுடைய இந்த ஏக்கம் திருப்தி செய்யப்பட்டது. கண்காணாதவராக இருந்த கடவுள் இப்போது சேசுக்கிறீஸ்துநாதரில் மனிதர் மத்தியில் வசிக்கிற கடவுள் ஆனார். அவர்

வழியாக சர்வேசுரனைப் பற்றிய அநேக சத்தியங்கள் மனிதனுக்கு வெளிப்படுத்தப்பட்டன.

ஆயினும், கண்காணாத கடவுளைப் பற்றிய இந்த அறிவையும், தேவ சிநேகத்தையும் தான் பெற்றுக் கொண்டதற்காக உலகம் ஒரு மகத்தான சிருஷ்டிக்குக் கடன்பட்டுள்ளது. அந்த சிருஷ்டி, அவதரித்த வார்த்தையானவராகிய சர்வேசுரனுடைய மாசற்ற திருமாதாவாகிய மாமரியே. ஏனெனில் அவர்களே தன் இரத்தத்தால் தன் உதரத்தில் தேவ–மனிதனை உருவாக்கினார்கள். அவர்களே மனித சுபாவத்தால் அவரை உடுத்தினார்கள்.

“கசப்பான கடல்” என்பது மாமரி என்னும் திருப்பெயரின் பொருள். “இரட்சகர்’ என்பது சேசு என்னும் திருப்பெயரின் பொருள். சேசுநாதரின் மிகக் கொடிய திருப்பாடுகளும், மாமரியின் வியாகுலங்களுமாகிய கசப்பான கடல் இல்லாதிருந்திருந்தால், சேசு என்னும் இரட்சணியம் நமக்குக் கிடைத்திருக்க வாய்ப்பேயில்லை.

மாமரி இல்லையெனில் நமக்கு இரட்சணியம் இல்லை

